VOL. LXXVI. No. 3. MARCH 1939.

# அருணோதயம்

# ARUNODAYAM

THE

TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

Published by the Leipzig Evang. Lutheran Mission,
Church of Sweden Mission, the Tamil Evang. Lutheran
Church and the Danish Mission

இதோ கடவுளின் ஆட்டுக்குட்டி
யோவான் 2 : 36

பொருள் அட்டவணை. பக்கம்.


| | |
|---|---|
| தியானம் ... ... | 47 |
| பத்திராதிபர் குறிப்புகள், மதிப்புரை ... | 49 |
| மாதர் பகுதி ... ... | 51 |
| வாலிபர் பகுதி ... ... | 53 |
| திருச்சபை வர்த்தமானம் ... ... | 57 |
| டேனிஷ் மிஷன் ... ... | 62 |


PRINTED AT
JEGAM & CO., DODSON PRESS,
TEPPAKULAM, TRICHY.

1939

## மரண அறிக்கை

காலஞ்சென்ற V. தேவயிரக்கம் உபாத்தியாயரின் குமாரனும், என் சகலப்பாடியுமாகிய **Mr. D. Raphael** உபாத்தியாயர், நமது செமிநேரியில் படித்து, சீர்காழி, மணல்மேடு வட்டங்களில் சில வருஷங்கள் வேலை செய்து வந்தார். பிறகு நமது மிசியோனைவிட்டு, United Free Church மிசியோனில், செஙகற்பட்டில், பல வருஷங்களாக உபாத்தியாயராகவும், இன்ஞாக்காரராகவும் ஊக்கமாய் அநேக ஆத்துமாக்களின் பிரயோஜனத்துக்கென்று பயனுற உழைத்து, தன் வேலையைவிட்டு நீங்கி, அங்கேயே Special Honorarv Magistrate ஆக சில வருஷங்கள் வேலை செய்து, சுவாசகாசம் (Athma) என்னும் வியாதியினால் சில காலம் கஷ்டப்பட்டு 1939ம் ௵ ஜனுவரிமீ 18ம் தேதி இரவு 2 மணிக்குக் கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். இவரது சடலம் அடுத்த நாள் காலை 9 மணிக்கு அவ்வூர் கல்லறைத் தோட்டத்தில், அநேக கிறிஸ்தவ சகோதரர்களும் குருக்களும் சுற்றத்தார்களும், ஏராளமான இந்து நண்பர்களும் சில ஐரோப்பிய மிசியோனரிகளும் அம்மாள்மார்களும் புடைசூழ, உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று, கனம் துரைசாமி ஐயரவர்களால் நல்லடக்கம் செய்யப்பட்டது. அவர் பின்வைத்துப் போயிருக்கும் மனைவிக்கும், நாலு பிள்ளைகளுக்கும், சுற்றத்தாருக்கும், தேவன் தாமே நல்லாறுதலைக் கட்டளையிட ஜெபிக்கக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இவர் கர்த்தருக்குப் பயந்து, நேர்மையாய் நடந்துகொண்ட ஓர் சிறந்த ஊழியன். வயது 50.

'தேவரீர் ஆயத்தம் பண்ணின உமது இரட்சிப்பை என் கண்கள் கண்டன" லூக்: 2 32.

Panampally,
Mayavaram,
1—2—1939.

M. Samuel,
*E. L. M. School,*
*Head Master.*

## மரண அறிக்கை

எனது அருமை மகன் **Edward Daniel** ஜனுவரிமீ 30உ வடுவூரில் திடீரென்று கர்த்தருடைய ராட்சியம் சேர்ந்தார். அவரது சடலம், மறுநாள், நீடாமங்கலம் கொண்டுவரப்பட்டு, சங: பொருந்திய கனம் P. Manickam ஐயரவர்களால் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது.

சங. 16. 6 — வயது 34.

Nidamangalam,
10—2—1939.

J. Arul Packiam Pillay,
*Retired Amin.*





தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

Edited by Rev. S. Gnanamanickam, Rev. P. Gaebler
& Mr. G. T. Williams, B. A., L. T.

| No. 3 | மார்ச்சு | 1939 |
| --- | --- | --- |


## தியானம்

இந்த வீண் செலவு என்னத்திற்கு ? மத். 26 : 8.

பெத்தானி கிராமத்தில் இயேசுவுக்கு விருந்து நடக்கையில் விலையுயர்ந்த பரிமள தைலத்தால் மரியாள் இயேசுவுக்கு அபிஷேகம் செய்ததைக் கண்ட யூதாசும் மற்றச் சீஷரும் கோபங்கொண்டு பேசினவார்த்தை இது. ஏழைகளின் குறையை நீக்க இப்பணத்தைச் செலவழித்திருந்தால் உத்தமம் என்பது யூதாசின் அபிப்பிராயம்.

பிறருடைய செய்கைகளைக்கண்டு உடனே தங்கள் அபிப்பிராயத்தை வைராக்கியத்துடன் எடுத்துரைக்குங் குணம் தற்காலத்திலும் இயேசுவின் சீஷரிடம் விளங்குவதுண்டு. ஞானத்தின் களஞ்சியம் தங்களிடமே இருப்பதாகவும், மற்ற மனுஷரெல்லாம் மூட சிகாமணிகளென்பதுபோலவும் எண்ணிப் பேசுகிற மனுஷரை எங்குங் காணலாம். தேவநாம மகிமைக்கென்றோ, எளியோரின் நன்மைக்கென்றோ சற்றேனும் சிரமப்படாமலும், ஒரு சல்லிகூட செலவழிக்க மனமற்றுமிருக்கும் இவர்கள் பிறருடைய செய்கைகளைக் குறித்துக் குறைகூறக் கிஞ்சித்தும் கூசார்கள்.

பிறருடைய செய்கைகளுக்கு நல்லர்த்தங் கொடுக்கும் நற்குணம் நம்மிடத்தில் எவ்வளவோ குறைபடுகிறது. எந்த நோக்கத்துடன் பிறர் இந்த அந்தக் காரியத்தைச் செய்தார்கள் என்றறியப் பிரயாசப்படாமல் உடனே அச்செய்கையைக் குறைகூறுவது நம்மில் பலருடைய விசேஷித்த தூர்க்குணம் அதிலும் நம்மைவிட மெலியாருடைய நற்கிரியைகளை வீண் செலவு (அல்லது அழிம்பு) என அழைத்தல் வெகுலேசு. பெலவீனப் பெண்பிள்ளையாகிய மரியாள் அன்பின் மேலீட்டினால் செய்த இக்காரியத்தை இயேசுவானவர் "நல்ல செய்கை" என்று அழைக்க, அவருடைய சிஷர் அதை வீண் செலவென்பது எவ்வளவு விபரீதம்!

இயேசுவை மகிமைப்படுத்த மரியாள் ஒரு பெரிய தொகையைச் செலவழித்துப் பரிமள தைலத்தை வாங்கினாள். தான் இதுவரையில் செய்த எல்லாச் செலவினும் இதுவே உத்தமமான தென்று மரியாள் நினைத்திருப்பாள். இதற்கு நேர்மாறானது யூதாசின் அபிப்பிராயம். நாம் இயேசுவை மகிமைப்படுத்தும் நோக்கமாய் எக்காரியத்தைத் துவக்கும்போதும், அதைக் குறைகூறும் மனுஷர் நம்மைச் சுற்றிலுமிருக்கிறார்களென்பதை உத்தேசித்து மனம் வேசாறாமல் நமது செவிகளை யடைத்துக் கொண்டு, கண்களை மாத்திரம் இயேசுவின் புறமாய்த் திருப்புதல் நலம்.

நாம் நமது ஜீவிய காலத்தில் எவ்வளவோ செலவழித்திருப்போமே. இதில் இயேசுவை மகிமைப்படுத்துவதற்கென்று நாம் மனசாரச் செய்த செலவு எவ்வளவு? திருச்சபையாகிய இயேசுவின் சரீரத்தை அலங்கரிப்பதைவிட மண்ணோடு மண்ணாய்ப்போகும் நமது நாற்ற சரீரத்தை அழகுப்படுத்தவும், பிறர் நம்மை மதிக்கவும் வேண்டுமென்று நகைக்காகவும், உடைக்காகவும் நாம் செலவழித்திருப்பது கொஞ்சநஞ்சமா?

நமது வீடுகளை, தோட்டங்களை, பிள்ளைகளை, அலங்கரிப்பது நமக்கு முக்கியமாய்த் தோன்றிற்று? இயேசுவை மகிமைப்படுத்துவது அதிலும் விசேஷமென்பதை நாம் உணருவோமானல் நமக்கு ஒரு நல்ல காலம் பிறந்ததென்னலாம். சுவிசேஷப் பிரபல்லியத்திற்காக ஊக்கம், கோயில் காரியங்களில் கரிசனம், பக்தி விர்த்திக்காக முயற்சி இவைகளில் நாம் அதிகமாய் ஈடுபடுவோமானல் உலகம் நமது செய்கைகளைப் பார்த்து: இந்த வீண் செலவு என்னத்திற்கு என்று குறைகூறலாம். அதினல் நாம் மனச்சோர்வடையவேண்டியதில்லை.

என்றாலும் தமிழ் கிறிஸ்தவர்களாகிய நம்மைப் பார்த்து: இந்த வீண் செலவு என்னத்திற்கு என்று பலர் நியாயமாய்க்



குறைகூற நாம் இடம் வைத்திருக்கிறதில்லையா? இயேசுவின் காரியம் நமக்கு முக்கியமா, நமது சொந்த காரியம் முக்கியமா? இயேசுவின் புகழ்ச்சி நமக்குப் பெரிதா, உலகத்தின் இகழ்ச்சி பெரிதா? நமது கையிலிருக்கும் யாவும் நமக்கு ஆண்டவர் கொடுத்ததே. அவைகளில் யாதொன்றையும் வீணில் செலவழிப்பது ஆண்டவருக்குப் பிரியமாயிராதே. நாம் எதைச் செய்தாலும் இயேசுவின் நாம மகிமைக்கென்று பலிக்கத்தக்கதாய் நடத்துவோமாக.

இரட்சகருடைய திருப்பாடுகளைத் தியானிக்கும் இக்காலம் நம்மை விசேஷித்த விதமாய் இயேசுவுக்காக சுய வெறுப்புடன் பல காரியங்களைச் செய்ய ஏவுங் காலம். "நான் இதை உனக்காகச் செய்தேன், நீ எனக்காக என்ன செய்தாய்" என்கிறார் இயேசு. "எனக்கும்மைத் தந்தீரே உமக்கென்ன நானுந் தாரேன்" என்று நாம் அவருக்கு நம்மைப் புதிதாய்ப் பிரதிஷ்டை செய்வோமாக.

S. G.

———:———

## பத்திராதிபர் குறிப்புகள்

நாம் திருச்சபையின் ஒரு விசேஷித்த காலப் பகுதிக் குட்பட்டிருக்கிறோம். நமதருமை இரட்சகரின் திருப்பாடுகளின் காக்ஷி இக்காலத்தில் நமது தியானங்கள், ஆராதனைகளின் முக்கிய பொருளாகும். பவுலப்போஸ்தலன் சிலுவையி லறையுண்ட கிறிஸ்துவையே எப்போதும் தன் கண்முன் வைத்திருந்தான். "நான் பார்த்து நடக்கிறவரையே நீங்களும் பார்த்து நடவுங்கள்" (பிலிப். 3 : 17) என்பது அப்போஸ்தலன் நமக்குச் சொல்லும் புத்திமதி. "நான் அவருடைய மரணத்தின் சாயலுக்கொப்பாகி எப்படியாயினும் மரித்தோரின் உயிர்த்தெழுதலுக்கு வந்து சேர்வதற் கேதுவாய் அவரையும் அவர் உயிர்த்தெழுதலின் வல்லமையையும் அவர் பாடுகளின் ஐக்கியத்தையும் அறிந்துகொள்ள வேண்டுமென்றிருக்கிறேன்" (பிலிப். 3 : 10.11) என்பதால் அவன் நாளுக்கு நாள் கிறிஸ்துவின் பாடுகள் மரணம் உயிர்த்தெழுதலின் ஐக்கியத்தைப் பற்றிய அறிவிலும் அனுபோகத்திலும் தேறினன் என்பது திண்ணம். நாம் கிறிஸ்துவின் பாடுகளில் ஐக்கியப்பட்டவர்களா?

———:———

## மதிப்புரை

மாஜி சங். J. B. ஞான ஒளிவு ஐயரால் இயற்றப்பட்டு வந்த "தமிழ்ச் சபைத் தீபிகை" என்ற சிறந்த மாதாந்திரப் பத்திரிகை போன வருஷம் அவர் காலஞ்சென்றதோடு நின்று

போயிற்று. இவ்வருஷம் ஜனுவரி மாசத்திலிருந்து அது மீண்டும் தன் அரிய ஊழியத்தை ஆரம்பித்திருப்பதற்காக ஆண்டவருக்குத் துதி செலுத்துகிறோம். திருச்சியிலிருக்கும் கனம் கனேன் R. A. மனுவேல் ஐயரும், ராவ்சாகிப் S. K. தேவசிகாமணி அவர்களும் இப்பத்திரிகையின் பதிப்பாளர். பக்தி விர்த்திக்கும் திருச்சபையின் முன்னேற்றத்திற்குமேற்ற அரிய பெரிய விஷயங்களைப் பாலும் பழமும் பாகும் பருப்புமிவை நாலுங் கலந்து வைத்தாற்போல் இனிய தமிழ் நடையில் சொற்சுவை பொருட் சுவையுடன் தமிழ் திருச்சபையாருக்குப் பரிமாற முன் வந்திருக்கும் சகோதரர் இருவருக்கும் தமிழ்த் திருச்சபை மனமார்ந்த நன்றிகூற கடமைப் பட்டுள்ளது. 48 பக்கங்களுக்கு மேல் அடங்கிய இச்சிறந்த பத்திரிகையின் வருஷ சந்தா ரூ. 2-0-0தான். மாத வருமானம் ரூ. 30-0-0க்குக் குறைவாயுள்ளவர்கள் ரூ. 1-8-0 கொடுத்தால் போதும். "தமிழ்ச் சபைத் தீபிகை" வாழ்க.

1. "மார்த்தீன் லுத்தரின் ஜீவிய சரித்திரம்."
2. "அவருடைய கிருபையில் நிலைநிற்குதல்."

தரங்கையிலுள்ள நமது அச்சுக்கூடம் அடைபட்டதால் நமது லுத்தரன் புஸ்தகப் பிரசுரங்கள் குறைந்துவிட்டன. ஆகிலும் தரங்கை புஸ்தகசாலை சம்பந்தமாய் இரண்டொரு புஸ்தகங்கள் வெளிப்பட்டாலும், அதைப்பற்றிய விளம்பரமொன்றும் வெளிப்படுகிறதில்லை. நமது சகோதரியாகிய மிசூரி லுத்தரன் மிஷன் சம்பந்தமாய்ப் புஸ்தக பிரசுர வேலை சுறுசுறுப்பாய் நடந்தேறுவதற்காகவும், மாதிரி புஸ்தகங்களை நமக்கனுப்பி விளம்பரம் செய்வதற்காகவும் நாம் நன்றியுள்ளவர்களாயிருக்கிறோம்.

"மார்த்தீன் லுத்தரின் ஜீவிய சரித்திரம்" என்ற சிறந்த நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு திரு. S. ஞானிக்கம் B.A., L.T. என்பவரால் சிறந்த தமிழ் நடையில் எழுதப்பெற்று மிசூரி லுத்தரன் பிரசுர சங்கத்தாரால் அச்சியற்றப்பெற்று தமிழ் லுத்தரன் சபைக்குக் கிடைத்திருப்பதை நாம் நன்றியறிதலோடு வரவேற்கிறோம். இது ஆங்கிலத்தில் கனம் E. A. Brueggemann ஐயரால் இயற்றப்பட்டது. சிறந்த துணிக்கட்டத்தில் 128 பக்கங்களுள்ளதாய் ஏழு படங்களோடு அழகாய் அச்சிட்டிருக்கும் இந்நூலில் விலை 10 அணாதான். அச்சிடும் செலவுக்குக் குறைவாய்த்தான் விற்கப்படுகிறதென்பது தெளிவாய்த் தெரிகிறது. லுத்தரன் கிறிஸ்தவர்களனைவரும் வாங்கி வாசிக்கவேண்டிய புஸ்தகமிது. வாணியம்பாடி மிசூரி லுத்தரன் புஸ்தகசாலையில் வாங்கலாம். வாசிக்கத் துவக்



கினல் முடிவுமட்டும் சலிப்பின்றிப் படிக்கவே ஏவுதலடைவோம். நமது வீடுகளொவ்வொன்றிலும் இப்புஸ்தகம் சீக்கிரம் வந்துசேர யாவரும் முயற்சியெடுக்கக் கோருகிறோம்.

"அவருடைய கிருபையில் நிலைநிற்குதல்" என்னும் நூல் 52 பக்கங்களுள்ளது. ஒருசந்தியின் 40 நாட்களுக்கும் உயிர்த்தெழுந்த பண்டிகைக்கும் (நடுவேயுள்ள 6 ஞாயிறுகளுக்கும்) ஆக 47 தியானங்களுள்ள புஸ்தகமிது. ஒவ்வொரு நாளுக்கும் வாசிக்கவேண்டிய வேதபாகக் குறிப்பும், தியானமும் இதில் உண்டு. தேவ கிருபையில் நிலைநிற்போரின் இலட்சணங்களும் கடமைகளும் கல்லான மனதையும் கரைக்கும் விதமாய் இத்தியானங்களில் எழுதப்பட்டிருக்கின்றன. ஆங்கிலத்தில் ஆல்பிரேட் டேர்ப்லர் என்பவர் இயற்றிய இத்தியானங்கள் சங். A. J. Lutz ஐயர் முயற்சியால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கின்றன. காகித அட்டையுள்ள ஒரு பிரதியின் விலை ஒரு அணாதான், காலிகோ பைண்டு விலை அணா 3. ஒரு அணவுக்கு இவ்வருமையான தியான புஸ்தகத்தை விற்பது மிசூரி மிஷன் சங்கத்தாரின் உதாரத்துவத்துக்கு ஒரு சான்றாகும். இது தமிழ் கிறிஸ்தவ சபையாரனைவரும் உபயோகிக்கக்கூடிய அருமையான பொக்கிஷமென்னலாம். வாணியம்பாடி அல்லது நாகர்கோயிலிலுள்ள மிசூரி லுத்தரன் புஸ்தகசாலையில் இதை வாங்கலாம்.

———:———

## மாதர் பகுதி

———

### பிள்ளையின் படம்

அன்னாளும் ஆண்டர்சனும் கோடை காலத்தில் சூரிய வெளிச்சமான பிரகாசமுள்ள ஒரு தினத்தில் கலியாணம்செய்து, தங்கள் சிறு வீட்டில் குடியேறினர். காலைதோறும் ஆண்டர்சன் தன் கொல்லப்பட்டரையில் சுறுசுறுப்பாய் வேலை செய்வான். வேலை முடிந்து வீடுவர இரவில் வெகு நேரமாகும். அப்போதைக்கப்போது பட்டரையின் வாசலில் வந்து நின்று தன் வீட்டை நோக்கி அன்னாள் என்ன செய்கிறாள் என்று பார்ப்பான். சாப்பாட்டு நேரத்திற்கு அன்னாளும் வெளியே வந்து அவனை அழைப்பாள். வருஷம் ஒன்று ஆயிற்று. இவர்கள் இருவருக்கும் வீடு பரதீசாயிற்று. குழந்தையும் பிறந்து, வெகு சீக்கிரம் சிறு வண்டியில் வைக்கப்பட்டு, வீட்டுக்கு முன்னாலே சுற்றி வந்தது. ஆண்டர்சன் தன் சொந்த கையினாலே வண்டி செய்தான். அன்னாளும் நேர்த்தியான மெத்தை தைத்து அதில் வைத்தாள். பிள்ளை 'யார் ஜாடை' என்று அடிக்கடி

வாக்குவாதம் நடக்கும். ஆண்டர்சன் குழந்தையைத் தூக்கிப் போட்டுப் பிடிக்கையில், குழந்தைக்கு என்ன நேரிடுமோ, கைதவறிக் கீழே விழுந்துவிடுமோ என்று அன்னாள் நடுங்கி நின்றுகொண்டிருப்பாள். ஒருநாள் விசேஷித்த நாள். படம் பிடிக்கிறவன் வந்து, கொல்லப்பட்டரையில் ஆண்டர்சன் வேலை செய்வதுபோல் பிடித்தான். பிறகு குழந்தையைத் தனியே வீட்டில் விளையாடவிட்டு, குழந்தை ஆச்சரியத்தோடு அவனை உற்றுப்பார்த்து விழித்திருக்கும் ஜாடையில் பிடித்தான். படம் எடுத்து வந்தவுடன், சட்டம்போட்டு, தாங்கள் விழித்ததும் பார்க்கக்கூடிய விடத்தில் சுவரில் தொங்கவிட்டனர்.

குளிர்காலம் வந்தது. இலையுதிர்காலத்தில் மழை பெய்ய ஆரம்பித்தது. ஆண்டர்சனுக்குப் பட்டரையில் நன்றாய் உஷ்ணமாயிருந்தது. அன்னாளும் ஸ்வென் என்னும் சிறுவனும் வீட்டிற்குள்ளேயே இருக்கவேண்டியிருந்தது. ஸ்வென் மெதுவாக வெளியேறி தகப்பன் பட்டரையின் கதவண்டை நின்றுகொண்டான். கதவைத் தட்டின சத்தம், அல்லது கூப்பிட்ட சத்தம்கூட தகப்பனுக்குக் கேட்கவில்லை. வெளியே வந்து பார்த்தபோது ஸ்வென் குளிரினால் மரத்துப்போயிருப்பதை ஆண்டர்சன் கண்டு, பட்டரையினுள் அனல் காட்டி வீட்டுக்குக் கொண்டுபோக, பையன் மறுநாள் கடுமையான இருமலினாலும் ஜலதோஷத்தினாலும் கஷ்டப்பட்டான். வைத்தியர் சோதித்தார். வியாதி அதிகரித்தது. ஒருநாள் வைத்தியர் நம்பிக்கையில்லை என்று கைவிட்டார். ஸ்வென் இறந்துபோனான். வீட்டில் அமைதலுண்டாயிற்று. புருஷனும் மனைவியும் சிலகாலம் ஒருவரோடொருவர் பேசக்கூடவில்லை.

காலம் செல்லச்செல்ல ஆண்டர்சன் வெளியில் சிநேகிதரின் சகவாசத்தை நாடினான். அன்னாள் மௌனமாயிருந்தாள். தனித்திருப்பதையே விரும்பினாள். இருவருக்கும் மனவருத்தம் ஏற்பட்டது. காரணம் இன்னதென்று தெளிவாயில்லை. பிள்ளை வெளியே போனதை நீ கவனிக்கவில்லை என்றான் ஆண்டர்சன். பிள்ளை கதவுக்கு வெளியே வெகுநேரம் நின்றதை நீ கவனிக்கவில்லை என்றாள் அன்னாள். வருத்தம் உச்சி நிலைக்கு வந்தது. இந்த ஜீவியம் போதும், நாம் இருவரும் அவரவர் தம் வழியே போகவேண்டியது என்றாள் அன்னாள். 'நீ சொல்வது சரியே. இவ்வாழ்க்கையை முடிப்பது தான் மேன்மை. உனக்குரியவைகளை எடுத்து உன் தாயார் வீட்டுக்குப்போ' என்று ஆண்டர்சன் சொன்னான்.

அன்னாளும் தனக்கானவைகளை ஒவ்வொன்றாய் எடுக்க ஆரம்பித்தாள். ஆண்டர்சன் கையில் அந்த நாள் பத்திரிகை



இருந்தது, கண்களோ அன்னாள் எதை எடுக்கிறாள் என்பதையே நோக்கிக் கொண்டிருந்தன. சுவரில் மாட்டியிருந்த பிள்ளையின் படத்தை அன்னாள் எடுப்பதைக் கண்டான். கண்டவுடன் குதித்தெழுந்து: 'அந்தப்படம் என்னுடையது' என்று கத்தினான். 'அது என்னுடையது. என்னுடைய ஒரே அருமையானதை என் கையிலிருந்து பறித்துப் போடுகிறாய்' என்றாள் அன்னாள். ஆண்டர்சன் ஓடிவந்து அவள் கையிலிருந்ததைப் பிடுங்கினான். அவள் விம்மி, விம்மி அழுது: ஸ்வென் தான் எனக்குப் பெரிய சந்தோஷத்தை உலகத்தில் கொடுத்தான். நானல்லவோ அவனைப்பெற்று வளர்த்த தாய்! இங்கே! (படத்தை உயரத்தில் தூக்கி) அவன் என்னை உற்றுப் பார்க்கிறான் என்றாள்.

ஆண்டர்சன் தலைகுனிந்து கதறி அழுதான். 'நீ படத்தைக் கொண்டு போகவே கூடாது. நாம் இருவரும் இவ்வளவு தூரம் சிநேகத்தில் பின்வாங்கிப் பிரியும் காலத்தில் இந்தப்படம் ஒன்றேதான் என் ஆறுதல். அவன் உயிரோடிருந்தால் நாம் இந்நிலைமைக்கு வந்திருப்போமா? நாம் எவ்வளவோ ஒற்றுமையாயிருந்தோமே. படம் என்னோடுதான் இருக்கவேண்டும்' என்றான்.

'படமில்லாமல் நான் ஒருபோதும் போகவே மாட்டேன். நான் போய்விட்டால் நீ நன்றாய் அமர்ந்து மனரம்மியமாய் இருப்பாய் என்று நினைத்திருந்தேன்' என்று அன்னாள் சொல்ல, ஆண்டர்சன்: நமது சந்தோஷத்துக்கு முக்கிய ஆதாரமாயிருந்த ஸ்வென் இறந்துபோனதால் நாம் இவ்வளவு வருத்தத்துக்குள்ளானோம். வருங்கால நிலை நமக்கு எப்படியிருக்கும் என்பதை நாம் அறியோம். நம் அருமையான குழந்தையையே நமக்கு வெளிச்சம் தரும் நக்ஷத்திரமாக வைத்து நம்ஜீவியத்தைப் புதிதாய்த் தொடங்கலாம் என்று நீ நினைக்கவில்லையா? என்று சொல்ல, அன்னாள் தாரை தாரையாய்க் கண்ணீர் சொரிந்து, 'துக்கமல்லவோ நம்மைக் கசப்பாக்கிற்று' என்று ஒருவருக்கொருவர் மன்னித்து, புது ஜீவியம் ஆரம்பித்தனர்.

L. VEDANAYAKAM.

---

## வாலிபர் பகுதி

### கோபம்

ஒருவன் தான் அநியாயம் அனுபவிக்கிறதாக எண்ணும் உணர்ச்சியின் வெளிப்பாடே கோபமாம். நல்ல கோபமுமுண்டு, ஆகாத கோபமுமுண்டு. எவ்வாறு அன்பு நன்மையின்மேல்

சார்ந்து தீமையின்மேல் சாராததினால் நற்குணமாகுமோ, அவ்வாறே கோபமும். அது சன்மார்க்கத்துக்கு எதிராக நின்றால், தீயதே, துன்மார்க்கத்துக்கு விரோதமாயிருந்தால் அது நல்லதே. அயோக்கியனுக்கு அன்பும் இல்லை, கோபமும் இல்லை. கோபத்துக்கும் நன்னெறிக்கும் கிரேக்க பாஷையில் ஒரே பதம் உபயோகமாவது கவனிப்புக்குரியது. ஒருவனுடைய கோபத்தைக்கொண்டே அவன் குணத்தை வெகு லேசாய் அறிந்து கொள்ளலாம். அவனுக்குக் கோபம் மூண்ட காரணம் என்ன? அவன் தன் கோபத்தைக் காட்டுவது எப்படி?

கோபம் தன்னில் தானே நல்லதுமல்ல, கெட்டதுமல்ல. அது அநியாயக் காரணத்தால் எழும்புமா, அநியாயக் கிரியைகளில் விளங்குமா, அற்ப விஷயத்தினின்று அபரிமிதமாய் வளருமா, ஒப்பரவாகுதலுக்காகக் கெஞ்சியும் ஒருபோதும் தணியாமல் நிற்குமா? அப்படியானால் அந்தக் கோபம் பாவமே. பரி: வேதம் இதற்குப் பல திருஷ்டாந்தம் கூறும். நாபோத் தன் திராட்சத் தோட்டத்தைக் கொடுக்க மறுத்ததற்காக ஆகாபுக்கு உண்டான கோபம் (1 ரா. 21, 5) அடாததே. தாவீதுக்கு 10,000 பேரையும் தனக்கோ 1000 பேரையும் கொடுத்த ஸ்திரீகள் பேரில் சவுலுக்கு வந்த கோபம் சரியல்ல. மொர்தேகாய் தனக்கு மரியாதை செய்யவில்லையென்று ஆமானுக்கு (எஸ். 3, 5) வந்த கோபமும் ஆகாததே. கிழக்கு சாஸ்திரிகள் ஊருக்குத் திரும்பும்போது தன்னண்டை வந்து சொல்லிக்கொள்ளவில்லை என்று ஏரோதேக்கு எழும்பின கோபம் ஏற்காததே. பிசாசின் கிரியைகளை அழிக்கத் தேவ குமாரன் வந்துவிட்டார் என்று கோபாவேசங்கொண்டு கோஷ்டம் பண்ணின பிசாசின் பரிவாரமும் இத்தகையது.

நியாயமான கோபமுண்டு. இவன் எங்கள்மேல் ராஜாவாயிருக்கிறதற்கு எங்களுக்குச் சம்மதம் இல்லை என்று சொல்லி அனுப்பின குடிகளை அரசன் கோபித்தது நியாயமே (லூக். 19, 14; மத். 22) கல்யாணத்துக்கு அழைப்புப் பெற்றவர்கள் அந்த ஊழியரைப் பரிகாசம் பண்ணிக் கொன்றதைக் குறித்து இராஜா அடைந்த கோபம் நியாயமே. யோவாபு அப்சலோமைக் குறித்துக் கோபம் கொண்டது நியாயமே (2 சாமு. 14, 30); சமாரியர் ஆண்டவருக்கு இடம் தராததுக்காக யாக்கோபுக்கும் யோவானுக்கும் வந்த கோபம் நியாயமே (லூக். 9, 52) ஆயினும் நியாயமான கோபமும் அநியாயமான விதமாய் வெளிப்படும்போது அது அநியாயமும் பாவமும் ஆகும். யோவாபுக்கு அப்சலோம் பேரில் அதிகமான எரிச்சலுண்டாகி அவனைக் குத்தினதும் (2 சாமு. 18, 14) சீஷர் வானத்திலிருந்து சமாரியர்மேல் அக்



கினி வர விரும்பினதும் பாவமான கோபமே. நீங்கள் கோபங்கொண்டாலும் பாவம் செய்யாதிருங்கள் என்று சங்கீதக்காரனும் (4, 5) பரி. பவுலும் (எபே. 4, 26) சொல்லுவது நியாயமான கோபத்தை ஆதரிப்பதாம். புருஷர் கோபமும் தர்க்கமும் இல்லாமல் பரிசுத்தமான கைகளை உயர்த்தி ஜெபம் பண்ண வேண்டுமென்று விரும்புகிறேன் (1 தீமோ. 2, 8). மனுஷருடைய கோபம் தேவனுடைய நீதியை நடப்பிக்கமாட்டாதே (யாக். 1, 20). நீங்கள் பழிவாங்காமல் கோபாக்கினைக்கு இடங்கொடுங்கள் (ரோ. 12, 20). சூரியன் அஸ்தமிக்கிறதற்கு முன்னாக உங்கள் எரிச்சல் தணியக்கடவது (எபே. 4, 26).

உத்தியோகத்துக்கு அவசியமான கோபமும் உண்டு. வைதீக, லௌகீக அதிகாரிகள் தங்கள் ஒழுங்குகள் சட்டங்கள் அசட்டை பண்ணப்படும் விஷயத்தில் அடைகிற கோபம் இது. நஷ்டம் தன்னைப் பாதிக்காதமட்டில் நூறு என்பதை எண்பது என்று (லூக். 16, 5—7) மாற்றுகிற உத்தியோகஸ்தனுக்கு உத்தரவாத உணர்வும் கோபமும் கிடையாது. ஆடுகளின் கொழுப்பை உண்டு, ஓநாய் வருவதைக் கண்டு அவைகளை விட்டு ஓடிப்போகிற கூலியாள் உத்தியோக கோபமும் ஆத்திரமும் அற்றவன் (யோ. 10, 12—13). ஆகாக் என்ற அமலேக்கிய அரசன் சவுலுடைய சொத்துக்கோ கனத்துக்கோ கேடு செய்திருந்தால், அவனைக் கண்டம் கண்டமாக அவன் வெட்டியிருப்பான். அவன் ஆண்டவருக்குமட்டுமே சத்துரு என்ற பார்வையால் சவுல் அவன் ஜீவனைப் போக்காமல் அவனுடைய கொள்ளைப் பொருளால் தன்னைத் திருப்தி செய்துகொள்ள எண்ணினன் (1 சாமு 15, 6-20); சாமுவேல் தீர்க்கதரிசியோ இதற்கு மாறாகத் தன் விஷயம்போல் தெய்வ விஷயத்தை எடுத்துக் கொண்டான். கடவுளுடைய சத்துரு, அவனுடைய சத்துரு; ஆகையால் அவன் தேவ கட்டளையை நிறைவேற்றி, ஆகாகைத் துண்டு துண்டாக துண்டித்துப்போட்டான். சவுல் ஆகாக் விஷயத்தில் நடந்துகொண்டதுபோல் ஆகாப் அரசன் பெனுதாத் விஷயத்தில் நடந்துகொண்டான். உத்தியோக கோபம் இல்லாமையால் சவுல் புறக்கணிக்கப்பட்டான் (1 சாமு. 15, 23), மரணத் தீர்ப்புப் பெற்றான் (1 ராஜா. 20, 32), உத்தியோக கோபத்துக்கு நல்ல முன்மாதிரி மோசே முனிவர். மனுஷர் கடவுளுக்குச்செய்த அநியாயத்தைத் தமக்குச் செய்யப்பட்டதாக அவர் பாராட்டினர். பொற் கன்றுகுட்டியைச் சுற்றிலும் ஜனம் நடனம் செய்வதைக் கண்டு, மோசே தன் கையில் கொண்டு வந்த தேவனெழுதிய கற்பலகைகளை மலையின் அடியிலே எறிந்து உடைத்துப்போட்டதும் உத்தியோக கோபத்தினால்தான்.

(2 மோ. 32, 19) எலீயா பாகாலின் பூசாரிகள் 450 பேரை வெட்டியதும் உத்தியோக கோபமே (1 ராஜா. 18, 40). இப்படிப்பட்ட கோபத்தின்பேரிலுள்ள தமது நற்பிரியத்தைக் கடவுள் வேறொரு சந்தர்ப்பத்தில் விளக்குகிறார். ஒரு விபசாரக்காரனை பினேகாஸ் குத்திப் போட்டபோது அதைக் கடவுள் அங்கீகரித்து அவனைப்பற்றி (4 மோ. 25, 13) இவன் தன் கடவுளுக்காக வைராக்கியம் காண்பித்து இஸ்ரவேல் புத்திரருக்காகப் பிராயசித்தம் செய்தபடியினால், அந்த உடன்படிக்கையின் படி அவனுக்கும் அவனுக்குப்பின் அவன் சந்ததிக்கும் நித்திய ஆசாரிய பட்டம் இருக்கும் என்று மோசேக்குச் சொன்னார்.

இன்னொருவகைக் கோபமும் உண்டு. இது நம்மெல்லாருக்கும் அவசியமான கோபம். அது நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு இருந்தது. எரேமியா எழுதின தீர்க்கதரிசனச் சுருளை யோயாக்கீன் இராஜா சூரிக்கத்தியினால் அறுத்து நெருப்பில் எறிந்தபோது, இராஜாவும் அந்த வார்த்தைகளை எல்லாம் கேட்ட அவனுடைய சகல ஊழியரும் திகில்கொள்ளவுமில்லை, தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொள்ளவுமில்லை (எரே. 36, 24); தங்கள் சொந்த சங்கை, கௌரவம், ஆஸ்தி விஷயத்தில் மனுஷருக்கு உண்டாகும் கோபதாபத்துக்கு எல்லைத் திட்டம் கிடையாது. ஆண்டவருடைய வீட்டுக்காகவும் அவர் மகிமைக்காகவும் கோபப்படுகிறவர்கள் மகா சொற்பம். நமது இரட்சகரோ தேவாலயத்தில் ஆடு மாடு புறா விற்கிறவர்களையும் உட்கார்ந்திருக்கிற காசுக்காரரையும் துரத்திய பரிசுத்த கோபம் நமக்கு முன்மாதிரியானதே. உமது வீட்டைப்பற்றிய வைராக்கியம் என்னைப் பட்சித்துவிடும் (சங். 69, 10) என்ற வாக்கு நிறைவேறிற்று. இந்த வைராக்கியம் பிரதான ஆசாரியனாகிய ஏலிக்குக் கிடையாது. கர்த்தருடைய வீடு தன் குமாரரால் தீட்டுப்படுவதைப் பல வருஷமாய்ப் பார்த்தும், அதைப்பற்றிக் கொஞ்சமாவது அவன் மனம் கொதிக்கவில்லை (1 சாமு 3, 13). ஆகையால் கடவுளால் அவன் தள்ளப்பட்டு அவன் பிடறி முறிந்தது (1 சாமு. 4, 18). இன்றைக்கும் நாம் கர்த்தருடைய வீட்டு விஷயத்தில் இரத்தப் பாத்தியத்தைப் பெரிதாக எண்ணி, நம்முடையவர்களுடைய இழிவான ஜீவியத்துக்காக மனம் கொதிக்காமல், மூடிக்கொண்டே இருக்க முயற்சி செய்தால் நாம் நமது இரட்சகரின் மாதிரியை அசட்டை செய்பவர்களே. நாலுவகைக் கோபம் நமது கவனிப்புக்கானது: பாவமான கோபம், நீதியான கோபம், உத்தியோக கோபம், பரிசுத்த கோபம்.

S. G. B.

———:———



## திருச்சபை வர்த்தமானம்

பிறையாறு வட்டத்தைச் சேர்ந்த மேட்டுச்சேரி, தில்லையாடி, இச்சிலடி, பூதலூர், அபிஷேகக் கட்டளை, பிறையாறு ஆண் பாடசாலைகளைச் சேர்ந்த 300 பிள்ளைகளுக்கென்று ஓர் கொண்டாட்டம் நடைபெற்றது. அபிநய பதங்கள் கும்மி கோலாட்டம், கதை நடித்தல், முதலியவைகளில் போட்டிப் பரிசுகள் பாடசாலைகளுக்குக் கிடைத்தன. மாணவ ரனைவருக்கும் சிற்றுண்டிகள் பரிமாறப்பட்டன.

All India Sunday School Union காரியதரிசி ஆகிய கனம் N. Franklin ஐயர் சென்னையிலிருந்து வந்து புரையாற்றில் ஜனவரி 2ம் வாரத்தில் ஓய்வுநாள் பாடபோதனை உபன்னியாசம் செய்தார். இதில் புரையார், மாயவரம், T. E. L. C. & E. L. M. பெண்பாடசாலை ஊழியர்களும் பங்குபெற்றனர். சபை குரு Rev. D. Belevendram ஐயரவர்கள் ஆவியானவர் விளம்பிய தரிசன ஆகமத்தின் 1-7 திருபங்களை காலை தியானத்திற்கென்று தெரிந்துகொண்டு நடத்தினார்கள். அதில் ஆவியானவர் சபைகளின் உள்ளான புறம்பான சீரைக்கண்டு கூறும் கண்டிப்பான ஆலோசனையையும், ஊழியர் தங்கள் ஊழியத் துறையில் உயிர்ப்புள்ளவர்களாகவும், விழிப்புள்ளவர்களாகவும் உத்திரவாதமுள்ளவர்களாகவும் நடக்கவேண்டிய விதத்தையும் வற்புறுத்திப் பேசினார்கள்.

### கனம் Franklin ஐயர் பேசிய பொருள்

1. வேதாகமம் தூற்றுக்கோடக்கும் முறை. என்பதில், வேதாகமம் ஒரு Text book அல்ல என்றும் அதை ஒரு கருவியாகக் கொண்டு பிள்ளைகள் கடவுளை அறிந்துகொள்ள வழி காட்டியாக உபயோகித்து, விஷயம், நோக்கம், ஆளுக்கேற்றபடி கதா முறையில் கண்கண்ட காட்சியாக மனோபாவனு சக்தியுடன் வர்ணித்து அழகாக சொல்லவேண்டும் என்றும் கூறினார்கள். மேலும், வேத சரித்திரம் சொல்லும்போது 4-8 வயதுள்ள பிள்ளைகளுக்கு, புஸ்தகமின்றி, வீண் கேள்வியற்றதும் உணர்ச்சி நிறைந்ததும் ஒரே போதனையுள்ளதும் ஜீவியத்தில் விளக்கிக் காட்டக்கூடியதுமான விதமாய் கதையை உருவப்படுத்திச் சொல்லவேண்டும் என்றும்,

2. Impression. பிள்ளைகளின் மனம் வெள்ளைக் கடிதம் போலிருக்கிறது அவர்களுக்கு கிடைக்கும் Impression மேல் தான் எந்தக்காரியமும் செய்கிறார்கள். பிள்ளை குரும்பு செய்வதும், பொய் பேசுவதும், பயப்படுவதும், அவர்களுக்கு கிடைத்துள்ள Impression இனாலேதான். ஆகையினால் 4-8 வயதுள்ள

பிள்ளைகளின் மனதில் வேத சரித்திரங்களிலுள்ள போதனைகளின்பேரில் நல்ல Impression உண்டுபண்ணவேண்டும் என்றும்,

3. **பிள்ளைகளின் வளர்ச்சி.** 1–24 வயதுமட்டும், சரீர, ஆத்தும, வளர்ச்சியுண்டு. அதற்குமேலும் ஆத்துமா வளர்ச்சியடைந்து நித்திய ஜீவ பதவி யடைகிறது. ஆதலால் பிள்ளைகளுக்கு குண அசைவு அவசியம். குரும்பு செய்து அதிகமாய் கேள்விகள் கேட்கும் பிள்ளைகளைத் தண்டியாமலும், தடைசெய்யாமலும், அசைவுள்ள சன்மார்க்க கதைகளால் சுறுசுறுப்புக்கொன்று அவர்களை வழிநடத்தவேண்டும் என்றும்,

4. Imitation & Imagination. எந்த நல்ல காரியத்தையும் பார்த்து அதேபோல் செய்ய பிள்ளைகளுக்கு ஆசை உண்டு. ஆவிக்குரிய காரியத்தையும், போதிக்குமுன்னமே, பிள்ளைகள் ஏற்றுக்கொண்டிருக்கிறபடியினால் மனோபாவனை சக்தியுடன் வேதக்கதைகளை உருவப்படுத்தி, ஆசையை மூட்டி கற்பித்தல் நலம் என்றும், நமது ஆண்டவரே மார்க்க அஸ்திபாரம் ஆதலால், அவரது அன்பு பரிசுத்தம், வல்லமை, வீரச்செய்கைகள் முதலியவற்றையும் அழகாக உருவப்படுத்தி புகட்டவேண்டும் என்றும் பலவிதமான திருஷ்டாந்தங்களுடனே தெளிவாகவும் நேர்த்தியாகவும் எடுத்துரைத்தார்கள். இதனடிவில் மூன்று மாதிரிப்பாடங்கள் ஊழியர்களால் ஆயத்தம்செய்யப்பட்டு நடத்தப்பட்டது. இக்கூட்டத்தில் பங்குபெற்ற ஊழியர் அனைவருக்கும் இத்தருணம் மிகுந்த பிரயோஜனத்தை விளைவித்தது.

பொரையாறு }
18—1—39 }

D. DEVANUKRAHAM,
*Teacher.*

---

விருதுநகர் சீர்திருத்த ஜூபிலி ஆலய கோபுர வரலாறு.

சுவிடிஷ் மிசியோனரிகள் மதுரையை தலைமையாக வைத்து கிராமச் சபைகளைச் சந்தித்து கண்காணித்து வருகையில், விருதுபட்டியில் சிறு சபை சேரவே, கனம் A. B. Johansson, ஐயர் காலத்தில் 1902ம்-ஆு இது ஓர்தனி சேகரமாகப் பிரிக்கப்பட்டது. அச்சமயமிருந்த சபையார் மிகச் சிலரே. அதன் பிறகு கனம் C J. Sandegren, Carl Sandegren J. Sandegren ஐயர்மார் பிரயாசையால் சபை விர்த்தியாகவே, ஆராதனைக்கென்று தனி இடமில்லாததால் காம்பவுண்டு பள்ளிக்கூடத்தில் வெகு காலமாக ஆராதனை நடந்து வந்தது.

இக்குறைவை நிவர்த்திக்க ஓர் தேவாலயத்தைக்கட்ட வேண்டுமென்பதாய் நெடுங்காலமாகப் பணம் சேகரிக்கப்பட்டு



வந்தது. 1917ம்-ஆு அக்டோபர்-மீ 31ம் தேதி யன்று சீர்திருத்தலின் நானூறும் வருஷ ஜூபிலியின் ஞாபகார்த்தமாக கனம் C. J. சாந்தகிரேன் சாஸ்திரியாரால் "சீர்திருத்த ஜூபிலி ஆலயம்" என்ற பெயரால் இத்தேவாலயத்திற்கு அஸ்திபாரம் போடப்பட்டது. அப்பொழுது சபைகுரு கனம் Carl சாந்தகிரேன் ஐயர்.

அச்சமயம் கோபுரமும் கட்டி முடிக்க வேண்டுமென்றும், பின்னால் சபை விர்த்தியாகும்போது தேவாலயத்தையும் விஸ்தாரமாக்கிக்கொள்ள இடமிருக்கும்படியாய் ஓர் சிறுவைக் கோவிலாக்கிக் கொள்ளலாமென்றும் தீர்மானித்து கட்டிடம் ஆரம்பமானது.

கனம் Carl Sandegren ஐயருக்குப்பின் வந்த கனம் பவுல் சாந்தகிரேன் ஐயர், இவ்வேலையைத் தொடர்ந்து செய்து தேவாலய கட்டிடத்தைக் கட்டி முடித்தார். இக்கட்டிடத்துக்காக நெடுங்காலமாய் இப்பகுதிச் சபை ஊழியர் தங்கள் சம்பளத்தில் ரூபாய்க்கு 1 தம்படி வீதம் செலுத்தி வந்தார்கள். சபையாரும், மற்றோரும் பண உதவி செய்தார்கள். இவ்விதம் சேர்ந்த தொகை ரூ. 7000—0—0 அத்தொகையுடன் ரூ. 3000—0—0 கடன் வாங்கி 10000—0—0 ரூபாய்க்கு அஸ்திபாரம் நீங்கலாக தேவாலயக்கட்டிடம் கட்டி, 1920ம்-ஆு டிசம்பர்-மீ 5ம்-உ பிரதிஷ்டை செய்யப்பட்டது. அக்காலத்தில் கனம் S. David ஐயர் இங்கே இருந்தார்.

அச்சமயம் சீர்மை சங்கத்திலிருந்து Bishop Dannel, Dr. Westman, Rev. G. Brundin ஆகிய ஸ்தானபதிகள் இங்கு விஜயம் செய்திருந்தார்கள்.

தேவாலயக்கட்டிடத்துக்கே பணம்போதாமல்போனதால் கோபுரத்தைப் பின்னால் கட்டிக்கொள்ளலாம் என்று கோபுரத்துக்கு ஒரு மெத்தை மாத்திரம் கட்டி, மேல் வாசலை அடைத்து வைத்திருந்தார்கள்.

இந்த அழகான தேவாலயத்திற்குக் கோபுரமில்லாக் குறைவை நிவர்த்தி செய்யுமாறு 1926ம்-ஆுத்திலிருந்து 'கோபுர நிதி' ஒன்று கனம் S. சாலமோன் ஐயர் காலத்தில் ஏற்படுத்தப்பட்டு அதன் பிறகு வந்த சங்கை S. ஞானமாணிக்கம், G. எரிக்ஸன், M. சாமுவேல், மாஜி G. L. ராஜேந்திரம், S. A. ஆரோக்கிய சாமி ஐயர்மார், அந்நிதி விர்த்தியாக வேண்டிய முயற்சிகளைச் செய்தார்கள்.

உற்சாக நன்கொடைகளும், விசேஷ காணிக்கைகளும், தாய்மார் கூட்டத்தில் தைத்த துணிமணி விற்பனைகளும்,

கொஞ்ச காலம் கொடுத்த ஊழியரின் மாதாந்தர வீதமும், கோபுர நிதியின் வட்டிப்பணமும், கார்டுகள் அச்சிட்டதின் மூலமாய் வந்த வசூலும் ஆகிய பலதரப்பட்ட வகைகளில் நாளடைவில் இந் நிதி விர்த்தியாகி வந்தது. கடைசியில் மொத்தம் சேர்ந்த தொகை ரூ. 1418—0—0 கடன் வாங்கினது ரூ. 250—0—0 கோபுர கட்டிட எஸ்டிமேட் ரூ. 1568—0—0. மணி ரிப்பேர், இடி தாங்கி செலவு ரூ. 100—0—0.

இதைக் கட்டி முடிக்க பலதரமும் பிரயத்தனப்பட்டும் பல அசந்தர்ப்பங்களால் முடியாமல் போய் கடைசியாய் ஸ்ரீ E. சந்தியாகு எஞ்சினியர் இப்பொறுப்பை ஒப்புக்கொள்ள, 1938ம்-ஹு அக்டோபர்-மீ 2ம்-உ வட்ட சங்கத்தலைவர் கனம் G. எரிக்ஸன் ஐயரவர்களால் ஜெபக்கூட்டம் நடத்தப்பட்டு இக்கோபுரக் கட்டிடம் ஆரம்பமானது.

வட்ட சங்கத்தலைவர் கனம் G. எரிக்ஸன் ஐயரவர்களின் பெரு முயற்சியாலும், நல் ஆலோசனையாலும், திட்டம் செய்து கொடுத்த பிளான்படியும் சபை குரு கனம் S. A. ஆரோக்கியசாமி ஐயரவர்கள் இக்கோபுரத்தைக் கட்டி முடிக்கும் அரிய பொறுப்பை தம்மேல் ஏற்றுக்கொண்டு இவ்வேலையை இனிது முடிவு பெறச் செய்ததை இச்சபை எக்காலத்திலும் நினைத்து நன்றி பாராட்ட கடமைப்பட்டுள்ளது.

நமது லுத்தரன் சபைகளில் ஓரிடத்திலுமில்லாத விதமாய் இக்கோபுரம் நான்கு பட்டைகளுள்ளதாய் சிமிண்டினாலும், செங்கல்லினாலும் மிக உறுதியாயும், வெகு அழகாயும் மேல் நாட்டு நாகரீகத்துக்கு ஏற்றபடி அமைக்கப்பட்டிருக்கிறது.

பெரிய யுத்தக்காலத்தில் ஆரம்பமான இத்தேவாலயம் நாளது மட்டும் மிசியோன் சங்க உதவியில்லாமல் விருது நகர் தமிழ் சுவிசேஷ லுத்தரன் சபையார் தாங்களே தங்கள் பணத்தினாலே இதைக்கட்டத் தீர்மானித்து, பணக்குறைவினாலும், மற்ற காரணங்களாலும் நின்று போகாமல் பூரண முடிவுபெற வழி வகைகளைக் கட்டளையிட்ட திரியேக தேவனுக்கு துதி உண்டாவதாக.

இதற்கென்று தங்கள் பொருளுதவியாலும், ஜெபத்தாலும் ஆலோசனையாலும் தாங்கி ஆதரித்த உதாரகுணமுள்ள உள்ளூர் வெளியூர் சகோதர, சகோதரிகள் அனைவருக்கும் கடவுளின் திரளான ஆசீர்வாதம் மென்மேலும் பெருக ஜெபிக்கிறோம்.

விருதுநகர், 29-1-1939. J. DAVID.

இவ்வாலயத்தின் படம் அடுத்த மாதம் வெளிப்படும்.

அரு. பத்.



திருச்சியிலுள்ள நமது மிசியோன், சபை ஸ்தாபனங்களை C. S. M. Director சங். Bæfverfeldt ஐயர் சென்ற ஜனுவரி மாதம் 25-27 தேதிகளில் சந்தித்தார். 25ம் தேதியாகிய புதன் மாலை 6½ மணிக்கு Kemp's Town இல் உள்ள நல்மேய்ப்ப ராலயத்தில் சபைகுரு சங். ஞானமாணிக்கம் ஐயர் இந்திய போங்கான தேவாராதனை நடத்த சங். Bæfverfeldt ஐயர் சுவிடிஷ் பாஷையில் செய்த பிரசங்கத்தை மகா கனம் Sandegren அத்தியக்ஷரவர்கள் தமிழில் மொழிபெயர்த்தார்கள். 26ம் தேதியாகிய வியாழன் மாலை 6 மணிக்கு கள்ளத்தெருவிலுள்ள நமது ஆண் பாடசாலையில் மின்சார விளக்கேற்றும் வைபவத்தை ஸ்ரீமதி Bæfverfeldt அம்மாள் நடத்தினார்கள். Director அவர்களுக்கு பாடசாலையின் சரித்திரமடங்கிய வரவேற்புப் பத்திரம் தலைமை உபாத்தியாயர் சங். M. S ஞானசிகாமணி ஐயரால் வாசிக்கப்பட்டது. பள்ளிப்பிள்ளைகள் கதை நடித்தல், சிறு நாடகங்கள், பாட்டுகளால் தங்கள் மரியாதையை வெளியிட்டார்கள். பிள்ளைகள் பாடிய சுவிடிஷ் பாட்டு டைரக்ற்றர் அவர்களுக்கும் அம்மாளுக்கும் மிகவும் உவப்பாயிருந்ததாகத் தெரிந்தது. 27ம் தேதியாகிய வெள்ளி மாலை 5 மணிக்கு நமது சபையாரால் தேநீர்க் கச்சேரி யொன்று கள்ளத்தெரு பள்ளிக்கூடத்தில் கனம் Bæfverfeldt ஐயருக்காகவும் அம்மாளுக்காகவும் நடத்தப்பட்டது. அதில் சபை குருவும், லுத்தரன் Lay People's League காரியதரிசியும் உபசார வார்த்தைகளைப் பேசி மாலை சூட்டினார்கள். அன்று மாலை 6½ மணிக்கு சீயோனாலயத்தில் நடந்த தேவாராதனையில் கருப்பையா என்ற இந்து வாலிப உபாத்தியாயர் தேவகாருண்யமென்ற பெயருடன் சங். Bæfverfeldt ஐயரால் ஞானஸ்னானம் பெற்றார். பிறகு டைரக்ற்றரவர்கள் பிரசங்க மேடையேறி "இதோ நான் உலக முடிவுமட்டாகச் சகல நாட்களிலும் உங்களுடனே கூட இருக்கிறேன்" என்ற வசனத்தின்பேரில் ஆங்கிலத்தில் பிரசங்கம் செய்ய, சபைகுரு அதைத் தமிழில் மொழி பெயர்த்தார். ஆராதனை முடிய வந்தனோபசாரப் பத்திரம் ஒன்றை திரு. A. C. சாமுவேல் பிள்ளை வாசிக்க, டைரெக்ற்றர் அவர்கள் அதற்குத் தகுந்த விடை பகர்ந்தார். அன்றிரவு கண் ஆஸ்பத்திரி டாக்டர் Joseph அவர்கள் வீட்டில் விருந்துண்ட பின் கெம்ஸ்டவுன் பாடசாலையின் தீபாலங்காரக் காக்ஷியைக் கண்டு களித்துக் கோயமுத்தூர் சென்றார்.

லைப்சிக் மிஷன் டைரக்ற்றர் கனம் Ihmels சாஸ்திரியாரவர்களுக்கு பெப்ருவரிமீ 7உயாகிய செவ்வாய் மாலை 5 மணிக்கு நமது சபையாரால் கள்ளத்தெரு பள்ளிக்கூடத்தில் ஒரு தேநீர்க் கச்சேரி நடந்தது. அதில் சபைகுருவும், லுத்தரன் Lay

People's League காரியதரிசியும் வந்தனோபசார வார்த்தைகள் பேசி மாலைகூட்ட சாஸ்திரியார் சமயோசிதமான பதிலளித்தார்.

இங்கிலாந்து தேசத்திலுள்ள Oxford, Edinburg நகரங்களில் நடந்த கிறிஸ்தவ மகாநாடுகளில் பங்கு பெற்றபின் Birmingham நகரத்தில் உபாத்திமைத் தொழிலில் பயிற்சி பெற்று முதன்மையாய்த்தேறி, சென்ற ஜனுவரி மாசக் கடைசியில் இந்தியாவுக்குத் திரும்பின திரு. S. தேவநேசன் B.A., B.D., Dip. Ed., அவர்கள் சென்ற பெப்ருவரி மாதம் 5ம் தேதி மாலை 6½ மணிக்கு திருச்சியிலுள்ள தரங்கை சபா மண்டபத்தில் தமது சீமைப் பிரயாணத்தைக் குறித்தும், விசேஷமாய் தாம் பங்குபெற்ற மகாநாடுகள், இங்கிலாந்து Sweden Germany தேசங்களில் தாம் சந்தித்த மிஷன் சிநேகிதர் மத்தியில் செய்த உபன்னியாசங்கள் முதலிய விஷயங்களைக் குறித்தும் எழுப்புதலான சொற்பொழிவொன்றை நடத்தினர். அவர் மதுரை அரசரடியிலுள்ள நமது High School Hostel இன் Warden ஆக நியமனம் பெற்று அவ்வேலையை ஒப்புக்கொண்டார். அவர் நமது வாலிபருக்கும், சபைகளுக்கும் ஆசீர்வாதமூட்டும் கருவியாக நீடூழி விளங்க ஆண்டவர் அருள்புரிவாராக.

———:———

# DANISH MISSION

Editor: REV. GNA. VEDAKAN, CUDDALORE N. T.

## I. பதிப்பாளரின் வசனம்

**ஜெப சங்கிலி பித்து:** தபால்மூலம் நம்மில் சிலருக்கு சில வார்த்தைகள் மாத்திரம் அடங்கிய உயிரற்ற ஜெபம் ஒன்றும், அதைப் பெற்றுக்கொள்கிறவர்கள் எழுதி ஏழு அல்லது ஒன்பது பேருக்கு தினம் தவறாமல் அனுப்பினுல் ஏதோ உலக பாக்கியம் கைகூடி வருமென்றும், அப்படிச் செய்யத் தவறினுல் ஏதோ உலக வாழ்விற்கு கேடு ஏற்படுமென்னும் குறிப்புடன் வந்துகொண்டிருக்கிறது. உலக பாக்கியமே மேலானது என்று கருதுகிறவர்கள் இதைப் பலருக்கு அனுப்புவதில் கண்ணும் கருத்துமாயிருக்கிறார்கள். தங்களுக்கும் தங்கள் உறவினருக்கும் நண்பருக்கும் பாக்கிடம் பெருகட்டும் என்று ஆத்திரப்பட்டு அனுப்புபவருமுண்டு. தங்கள் விரோதிகளுக்கு ஒழுங்காய் நிறைவேற்றத் தவறினுல் கேடு வரட்டும் என்று கோரி அனுப்பியும் வருகிறார்கள். நோக்கம் எவ்வளவு இழிவாயினும் தபால் இலாக்காவுக்கு வருமானத்தை அதிகரிக்கவே இது பயன்படு



கிறது. அச் செப சுற்றுக் கடிதத்தில் கூறியிருக்கும் லாபமடைந்தோர் தீமையடைந்தோர் பெயர்கள் வெறும் மனோபாவனைப் பெயர்களே. பரம கடவுள் தமது மக்களின் இருதய அசைவுடன் எழும்பும் உணர்ச்சியுள்ள பொங்குதலான ஜெபத்தைக் கேட்பாரா? அல்லது வார்த்தைகளடங்கிய உயிரற்ற கடிதங்களிலுள்ளதைக் கண்ணுற்று மாத்திரம் பார்ப்பாரா? மேலும், "முதலாவது கடவுளுடைய ராஜ்யத்தைத் தேடுங்கள். இவையெல்லாம் கூடக் கொடுக்கப்படும்" மத். 5, 33. என்றவர் நாம்ஜெப சங்கிலியின் மூலம் தேடுவதை மதிப்பாரா? மேலும், எவ்வித பெரு லாபமும் உழைப்பினுல் மாத்திரம்தான் கடவுள் கிருபையால் அவர் சித்தப்படி பெற்றுக்கொள்ளக் கூடும்: அப்படியிருக்க, யோகம், அதிர்ஷ்டம், நல்ல காலம் தானே வந்துவிடும் என்று எதிர்பார்க்கலாமா? இரண்டாம் கற்பனையின் விளக்கத்தில் "மந்திரதந்திரஞ் செய்யாமலும்,... புகழ்ந்து துதிக்கவேண்டும்." என்று கூறுவதைக் கவனிக்க வேண்டும். ஜெப சங்கிலி அப்பியாசம் வெறும் மந்திரமே! அனுப்புவருக்கு தபால் செலவு நஷ்டமும் வீண் முயற்சியுமே! இதற்குப் பதில் தினசரி தனி ஜீவிய பிரதிஷ்டையும், இந்திய மக்களின் ரட்சிப்புக்காக உள்ளத்திலிருந்து ஆத்திர ஜெபமும் ஊக்கமும் உண்மையுமான முயற்சியும் பெருகுமானுல் எவ்வளவு மேலானது! ஜெப சங்கிலி கடிதம் பெறுபவர் அதை உடனே கிழித்து எறியலாம் அல்லது மரியாதைக்காக அனுப்பியவருக்கே திருப்பி அனுப்பிவிடுதல் நலம்.

அய்யலூர் ரயில் விபத்தின் பாடங்கள்: கடந்த வருஷ அய்யலூர் ரயில் விபத்தின் பின், சில நாட்களுக்கு ரயில் பயணம் செய்தவர் முன் வண்டிகளை விலக்கி, பின் வண்டிகளிலேயே, இன்னும் கார்டு வண்டியிலும் இடம் தேடி வந்தார்கள். இது போதுமா? நடந்த விபத்தை விசாரணை செய்த சர்க்கார் இன்ஸ்பெக்டர் தமது ரிப்போர்ட்டில் குறிப்பிடுவதை நாம் அறிவது நல்லது. இவ்விபத்து திடீரென்று மேட்டில் பெய்த கடுமழையினுதலால் ரயில்காரர் எந்தவிதத்திலும் இதைத் தடுத்திருக்க முடியாது. ஆனுல், சமீபத்திலுள்ள கிராமஸ்தர் விபத்து நேரிடும் இரண்டு மணி நேரத்துக்கு முன் உடைப்பு ஏற்பட்டதை அறிந்தும் தெரிவியாமற்போனதும், விபத்தில் கஷ்டப்பட்டவர் தவிர மற்ற பிரயாணிகளில் அநேகர் நிர்விசாரிகளாய் கீழே விழாத வண்டிகளில் ஏறிக்கொண்டு இரா முழுவதும் சும்மா உட்கார்ந்திருந்ததும் கவனிக்கத்தக்கதே!" பிறருக்கு என்ன நேரிடினும் கவனியாதவர்களும், பொதுநல உணர்ச்சியும், சமூக ஊழிய மனமும் அற்று வாழ்பவர் நமது தேசத்தில் எத்தனையாயிருக்கிறார்கள். தங்கள் வாழ்வின் சுக

துக்கத்தில் பிறரோடு கலந்துகொள்ளாதவரும், ஆன்மீக அநுபவங்களை பகிர்ந்துகொள்ளாதவரும் திருச்சபையாரிலும் பார்க்கும்போது நல்ல சமாரியன் சரிதையிலுள்ள பக்கமாய் விலகிப் போனவர்களைத்தான் நாம் ஒப்பிடவேண்டும். சமுதாய வாழ்வில் கிறிஸ்தவர்களுக்கு ஆதிக உத்திரவாதம் உண்டு. சபை ஓய்வுநாளில் ஆலயத்தில் கூடி வருதல்மாத்திரம் போதாது. போதகரின் வீடு சந்திப்பு மாத்திரம் போதாது. ஐக்கியம் திருமேஜையில் "ஒரே பாத்திரத்தில்" ஏற்படுபவதுமாத்திரம போதாது. சமூக வாழ்வின் சுகதுக்கங்களிலும், சமூக முன்னேற்ற பணிவிடை, சுவிசேஷ ஊழியம், கூடி ஜெபித்தல் முதலியவைகளிலும் ஏற்படும் ஐக்கியம் நம்மவருக்குள் பெருக வேண்டும்.

*   *   *   *

செல்வாக்குப் பெருக்கத்தைப் பற்றிய டாக்டர் காகவாவின் பிரசங்கங்கள் : ஜப்பானிய காகவா பண்டிதர் தாம்பரம் அகில உலக மிஷனெரி மகாநாட்டுக்குவந்தவர். அங்கங்கே, இந்தியஜன சமுதாய செல்வாக்கு பெருக்கத்திற்குத் தம் அநுபவ ஆலோசனைகளைத் தமது பிரசங்கத்தில் கொடுத்து வருகிறார். அவைகளில் சிலவற்றைக் கூறுவோம். ஐக்கிய நாணய சங்கத்தின் பிரயோஜனம் தனித்தனி ஆட்களுக்கு கடன் கொடுக்க மாத்திரம் இராமல், தனித்தனி ஆளின் தொழிலின் பலன்களை ஒன்று சேர்த்து, அதைத் தக்க லாபத்திற்கு விற்றுப் பொது உடைமை ஆக்கி ஆதாயத்தைப் பகிர்த்து கொடுக்கத்தக்கதாக இருக்க வேண்டும். உதாரணம் : ஒரு சங்கத்திலுள்ள ஒரு ஆள் பசுமாடு வாங்கப் பணம் கடன் வாங்குவதாக மாத்திரம் இராமல் அச்சங்கத்திலுள்ள அனைவரும் தங்கள் பசுமாடுகளின் பாலைச் சங்கம் பொதுவாக்கி விற்பனை எளிதில் செய்து, லாபத்தை பால்காரருக்குப் பிரித்துக் கொடுப்பதும் இவ்விதமே கிராம சாகுபடி நெல், மணிலா, நவதானியம், காய்கறிகள், முட்டைகள், நெசவுத் துணிகள், கைவேலை சாமான்கள், பழவர்க்கங்கள் முதலியவைகளை விற்பனை செய்வதில் ஈடுபடச் செய்வதினால் கிராம செல்வாக்கு நிலை சங்கத்தின் மூலமாய் பெருகுவதாக மாத்திரம் இராமல், சமுதாய விர்த்திக்கான பொது உணர்ச்சி அதிகரித்து, மனிதர் தன் நலம் என்றே இராமல், பிறர் நலம் என்றும் ஜீவிப்பார்கள் என்கிறார். சங்கத்தின் வேலையில் ஊழல் ஏற்படாதபடி, கண்ணியமானோர் என்பவர் சங்கத்தின் உத்தியோகஸ்தராக அல்ல, உண்மையில் சற்குணமானவரே நிர்வகிக்கவேண்டும். சங்கத்திற்குப் பணம் பெரிதல்ல, குணமும் நன்நடத்தையுமே. சற்குணம் பெருக நாம் கிராம பாடசாலைகளின் மூலமாய் இளைஞருக்குள்ளும், சன்மார்க்க சபா மூலமாய் தெய்வீக பக்தி



யுண்டுபண்ணி பெரியவருக்குள்ளும் முயற்சிக்க வேண்டுமென்கிறார். இந்தியாவில் மழை மோசம் செய்து வருவதால் சாகுபடி செய்வது அவ்வளவு ஸ்திரமாக இல்லை. புஞ்சை நிலக்காரர் அதிகமாக மழையின்றி வரக்கூடிய கொறுக்காய்ப்புளி, பூவரசு கருவேலன் முதலிய தழைகளுள்ள மரங்களை உற்பத்தி செய்து பால் ஜாதி ஆடுகளை வளர்த்து ஆட்டுப்பாலை உபயோகப் படுத்துவதுமன்றி ஆட்டு மந்தை விர்த்தி செய்து லாபம் அடையலாம். ஒரு கிராமத்தின் ஏரி அல்லது ஆற்றுப்பாய்ச்சல் குறையும் போது அங்குள்ள எல்லா நிலமும் பயிரிடாமல், தண்ணீருக்குத் தகுந்த நிலம் மாத்திரம் பயிர்செய்து, ஜனங்களுடைய உழைப்புக்குத் தக்கதாக எல்லாரும் விளைச்சலைப் பகிர்ந்து கொள்ளலாம். ஒரு கிராமத்தில் சிலருக்கு ஏற்படக்கூடிய எவ்வித நஷ்டத்திலும் கிராம பொதுஜன ஐக்கிய சங்கமே உதவ முன் வரவேண்டும். தேச முன்னேற்ற எல்லா முயற்சியிலும் ஐக்கியமும் ஒத்துழைப்புமே மேலிட்டு, சுயநலம் முழுவதுமாகவே அற்றுப் போகவேண்டும். இவ்விதமே ஜப்பானில் நடக்கிறதாம். இந்தியாவில் அவர் காணும் சிறப்பானவைகளிலிருந்து அவர் உத்தேசிப்பது, இந்தியா உலகத்தில் ஒரு பெரிய ராஜ்யம் ஆகுமென்பதே. ஒத்துழைக்கும் ஐக்கியமே சகல மேன்மையையும் ஜப்பான் பெற்றது போல் இத்தேசம் அடைய வேண்டுமென்கிறார்.

*   *   *   *

சபைகளில் இந்திய சங்கீத விர்த்தி : சினிமா கிராமபோன் பிளேட், ஆகாயவாணி மூலமாய்த் தற்காலத்தில் கேட்டுவரும் சங்கீதத்தினால் தமிழ் திருச்சபையார் ஆலயத்தில் அல்லது வீடுகளில் பாடும் கீர்த்தனை ராகங்களில் அதிருப்திகொண்டு, "கோவில் பாட்டுகள் யூஸ்லஸ்; கீர்த்தனைப் பாட்டுகள் சுத்த மோசம்; ஐயர்மார் கவனிக்கிறதில்லை." என்று குறை கூறுவதைக் கேட்கிறோம். குறை கூறுவதைவிட்டு, வரும் காலத்திலாவது கிறிஸ்தவர்கள் மத்தியில் ஏற்படும் சங்கீதம் சாஸ்திரப் போங்காயிருக்கும்படி, காகவா பண்டிதர் ஆலோசனையின்படி எல்லாரும் இவ்விஷயத்தில் ஒத்து, ஐக்கியத்துடன் ஒரு முகப்பட்டு அஸ்திவாரத்திலிருந்து முயற்சிக்கிறவர்களாயிருக்கவேண்டும். எந்தப்பெரிய காரியத்தையும் ஜெயமுடிவுக்கு கொண்டுவர சில வருஷ தவணையும், அத்தனை வருஷத்துக்கும் திட்ட ஒழுங்கும் வேண்டும். அடுத்த பத்து வருஷ திட்டம் போடுவோம், கிராம புதிய சபையார் ரசமான ராகங்களில் பாடல் பயிற்சி பெற சிறந்த கிறிஸ்தவ கருத்துள்ள பாடல்கள் வருஷத்திற்கு 20 ஆக 10 வருஷத்துக்கு, 200 பாடல்களும் நாடோடிய திருத்தமான ராகத்தில் சேர்ந்தும் தனித்தும் திருத்தமாய் பாடக்கூடுமானால் இந்திய தமிழ் சபைக்கு எவ்வளவு செல்வாக்கு!

இப்போது நாம் சாதாரணமாய் ஆங்கிலய கலப்பு சங்கீதத்தில் பாடும் "இயேசுவையே துதி செய், நீ மனமே..." என்ற கீர்த்தனை எவ்விதமாக சுத்த ராகத்தில் பாடப் படலாம். ஸ்ரீமான் வாஷிங்றன் பென்ஜமீன் பிரசங்கியார், (குருக்குழு பழைய மாணவர்) இந்த 200 பாடல்களை எழுதியனுப்ப, நாம் அருணோதயத்தில் இனிமேல் பிரசுரஞ் செய்வோம். கிறிஸ்தவ குடும்பங்களில், சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் சங்கீத சாஸ்திரப் பயிற்சி சில குடும்பங்களாக சேர்ந்து செலவைப் பகிர்ந்து கொண்டு, சிலருக்கு இந்திய கருவிகள் விசேஷமாய் வயலின், புல்லாங்குழல் மிருதங்கம் அப்பியாசம் கொடுக்க வேண்டும். நமது ஓய்வுநாட் பாடசாலை சங்கம், கி. பக்தி முயற்சி சங்கம், வாழ் வீரர் சங்கம், வாலிபர் சங்கம் முதலிய சங்கங்களில் அந்தந்த சபைகளில் சங்கீத வகுப்பு ஏற்படுத்துவது நலம். ஆலயப்பாடகருக்கு வாரா வாரம் நடக்கும் பாட்டு அப்பியாசத்தில், இந்து பஜனை நடத்துகிறவர்களின் உதவியையும் தேடவேண்டும். புதிய திருத்தமான ராகங்களை ஆலயப்பாடகர் பாடிக்காட்டும்போதெல்லாம், சபை அனைத்துக்கும் அப்பியாசம் வைப்பதால் எல்லாரும் சேர்ந்து பாட பயிற்சி செய்ய ஏதுவுண்டு. சபையின் வருஷாந்தர உற்சவம் எதுவுண்டோ, அப்போதெல்லாம் சிறுவர்க்குள்ளும் பெரியவர்க்குள்ளும் சங்கீத தேர்ச்சி போட்டிவைத்து பரிசளித்துக்கொண்டே போவதும் நலம். கிறிஸ்தவர்களின் தெருப்பஜனை தற்போது அட்வென்ற் கிறிஸ்மஸ் விடியற்கால குளிரில் தூக்கநேரத்தில் நடப்பதைவிட்டு, சனி மாலை தோறும், ஒவ்வொரு விசேஷநாளின் ஆயத்தமாக காலையிலோ மாலையிலோ பழையபாடல்களைக்கொண்டேயல்ல சினிமா ராகங்களை உபயோகித்தும் அல்ல, சுத்த கர்நாடக ராகங்களைத் தனித்தும் சேர்ந்தும் தெருக்களில் இந்துக்களுக்கு மேலாக உயர்ந்த நடையில் பாடி அப்பாடல் பிரதிகளை வீடுகளிலுள்ளவருக்கும் தெருவில் போவோருக்கும் கொடுத்துவருவதால் எவ்வளவாக சிறந்த பாடல்களை பரவச் செய்யக்கூடும். ஆராதனை ஒழுங்கையும் சங்கீத முறையாக்கிக்கொள்ளலாம். சில ஆண்டுகளுக்கு முன் பாடல்கள் இயற்றிய வேத நாயகம் சாஸ்திரியார், கிருஷ்ணப் பிள்ளை முதலியோரின் பாடல்களில் எக்காலமும் திருப்தி கொண்டிருக்கலாமா? இவைகளில் நாம் காணும் அடுக்குப் பதங்களும், இந்து சமயத்தோடு கலந்த கருத்துகளும் இக்காலத்தில் கிறிஸ்தவ அநுபவத்திற்கும் பக்திக்கும் எழுப்புதலைத் தரத்தக்க அளவில் இல்லையே. அப்படியானால், புதிய கிறிஸ்தவ பாரதி மாரும் எழும்பவேண்டும்! கனம் ஷாராக் ஐயர் அமைத்துள்ள ஒத்துப்பாடும் கீர்த்தனை போங்கு, (Harmony in Lyrics), மேற்கு சங்கீத போங்கே நமக்கு பொருந்தாது என்று சொல்



கிற இக்காலத்தில் ஏற்றது ஆகுமா? சபைகள் ஒன்று சேர்ந்து திரவியம் சேகரித்து, சிலருக்கு சங்கீதப் பயிற்சியுடன் அண்ணாமலை கலாசாலையில் தமிழ் வித்வான் பயிற்சியும் கொடுத்து கலையைத் திருச்சபைக்கு பயன்படச் செய்யவேண்டும். ஆங்கிலயப் பாடல்கள் சிலவற்றிலுள்ள உன்னத கருத்து தமிழ் செய்யுளிலும் சங்கீதத்திலும் அமையவேண்டும். ஆசிரமப் பாமாலையில் நாம் காணும் சில பாடல்களைப்போல் அநேகப் பாடல்கள் அமைக்கப்படவேண்டும்.

இருக்கிற நிலையை மாற்ற, குறைகூறுவது போதாது. காகவா பண்டிதர் ஆலோசனை சொல்வதை ஏற்று, சங்கீத விஷயத்தில் முன்னேற்றம்கொண்டுவர சபைகளும், கிறிஸ்தவ குடும்பங்களும், ஒற்றுமைப்பட்டு ஐக்கிய எத்தனங்களைக் கையாட ஆண்டவருடைய முன் செல்லுதலைப் பெற்று நடத்த வேண்டும்.

---

## II. மிஷன் சபை செய்திகள்

சர்ச் போர்டு ஒழுங்குகள்: ஜனுவரி 23, 24உ களில் நடந்த சர்ச் போர்டு கூட்டத்திலுள்ள சில தீர்மானங்களை இங்கு கூறுவோம்:—

சம்பள வெட்டு: ஊழியரில் ரூ. 45க்கு மேற்பட்டவர்களுக்கு, ரூபாய்க்கு 2 அணா: ரூ. 20க்கு மேலும் 44 வரையில் ரூபாய்க்கு 1 அணா வீதம். நெல்லிக்குப்பம் உயர்தரப் பாடசாலை இவ்வருஷம் ஏப்ரில் கடைசியில் எடுத்துவிடப்படும்.

போதகர்மார் பயிற்சி: B.A. பட்டம் பெற்றவர்கள் பெங்களூர் அல்லது சேராம்பூர் கலாசாலைக்கு அனுப்பப்பெற்று, அத்தரன் பயிற்சியும் கொடுக்கப்படும். ஸ்கூல் பைனல் படிப்புக்காரர் சென்னை குருகுழுவுக்குப் பயிற்சி தமிழிலேயே இருக்குமானால் அனுப்பப்படுவார்கள். போதக உத்தரவாதம் பெறுமுன் உதவி குருக்களாயிருக்கவேண்டும். போதகர்மாருக்கு ஒழுங்காய் ரிபிரஷர் கோர்ஸ் நடத்தப்படும்.

சபைகளின் ஐக்கியம்: சம்பந்தமாக, உலகமெங்குமுள்ள பொதுவான திருச்சபையையே நமது சபை முன் வைத்து, ஐக்கியத்தின் முதல்படியாக F.E.L.C.யோடும் அதே சமயத்தில் பரந்த ஐக்கியத்துக்குரிய முயற்சிகளோடும் சம்பந்தப்பட்டு இருக்கும்.

தற்போதிய மிஷன் சபை ஒழுங்கு-திட்டம் மாற்றுதலை ஆலோசிக்க ஒரு கமிற்றி நியமிக்கப்பட்டிருக்கிறது.

வேலை ஒழுங்குகள் : கனம் பின்சலவ் ஐயருக்குப் பதிலாக கனம் K. ஐபர்க் ஐயர் பிரசிடெண்டாக இருப்பார். வைஸ் பிரசிடெண்டாக கனம் H. பியாரம் ஐயர் ; விருத்தாசலம் ஸ்திரீகளின் வேலைக்கு ஸ்ரீமதி S. டெய்லர் அம்மாள் நியமனம் ; தரிசனபுரம் வேத பயிற்சி சாலைக்கு ஸ்ரீமதி S. விசுவாசம் அம்மாள் கனம் பார்டன் பிளத் அம்மாளுக்கு பதிலாகவும், கனம் E. குனுயூட்சன் அம்மாள் உதவியாகவும் நியமனம். பண்ணுருட்டி கனம் E. லின்டன் மயர் அம்மாள் சீர்மைக்குப் போகும்போது பதிலாக, கனம் M. வாக்கர் அம்மாள், திருவண்ணாமலை கனம் S. டால்ஸ்கார்டு அம்மாள் லீவில் போகும் போது கனம் A. பீடர்சன் அம்மாள் ;

அக்டோபர் 2ம் ஞாயிறு சுதேச மிஷனெரி நாளாக ஆசரிக்கப்படும்.

*　　*　　*　　*

**மிஷனெரிமாரின் பயணங்கள் :**

Miss K. Bardenfleth — பெப்ருவரி 10.
Rev. D. Johansen, துரைசானி பிள்ளைகள் — பெப்ருவரி கடைசி.
Rev. C. Bindslev — மார்ச் 11.
Miss S. Dalsgaard — மார்ச் கடைசி.
" E. Lindenmayer — ஏப்ரில் துவக்கம்.
" K. Hauge — மே துவக்கம்.
" A. Hansen — மே துவக்கம்.

Rt. Rev. A. Malmstrom அத்தியட்சரும் அம்மாளும் மார்ச் மத்தியிலும், கனம் A. Holt ஐயர் மார்ச் கடைசியிலும் சுயதேசம் புறப்படுவார்கள்.

*　　*　　*　　*

**வடதுரசலூரில் கனம் மில்லர் துரை விஜயம் :**—லெப்பர் மிஷனின் இந்தியா காரியதரிசியான கனம் மில்லர் (M. K. Miller Secretary for India, Mission to Lepers ஜனுவரி மாதம் 21ம் தேதி காலை இவ்விடத்தைப் பார்வையிட வந்தார். அன்று மாலை 5 மணிக்கு அவரால் பழைய health home வியாதியுள்ள பிள்ளைகளுக்கென்று திறந்து வைத்தார். அவ்வமையம் சாரணரால் அன்னவருக்கு "Guard of honour" கொடுக்கப்பட்டது. பெண் வழி காட்டிகள் (Girl Guides) கோலாட்டமும், நீல குருவி சங்கம் (Blue Birds) கும்மியும் செய்தனர். அன்று இரவு 7 மணிக்கு C. E. சங்கத்தாரால் நவீன முறையில்



"Birth of Christ" நடித்து காண்பிக்கப்பட்டது. 22ம் தேதி காலை ஆராதனையில் "Hands of Jesus" என்பதின் பேரில் எழுப்புதலாகப் பேசினர்.

Mr. & Mrs. Miller இந்தியாவில் உள்ள சரும வியாதியஸ்தருக்குச் செய்துவரும் தொண்டு பாராட்டத்தக்கது. எல்லாம் வல்ல இறைவன் இவ்வேலை வியாதியஸ்தருக்கு வேண்டிய ஆறுதலும், பலம் சுகம் எல்லாம் கொடுக்கவும், ஜெபம், பணம் ஆட்கள் மூலம் உதவி செய்யும் அனைவரையும் காப்பாராக!

Silas J. WALTER.

*　　*　　*　　*

**மரணம் :**—பரிக்கல் பாடசாலை தலைமை ஆசிரியர் ஸ்ரீ கேசமணி உபாத்தியாயரின் மனைவி ஸ்ரீ கிரேய்ஸ் அம்மாள் கபவாத சுரம் கண்டு, பட்டாம் பாக்கத்தில் ஜனுவரி மாதம் 16ம் தேதி பரம ராஜ்யம் சேர்ந்தனர். வயது 28.

தலைமை ஆசிரியராக பரிக்கல் பாடசாலையில் கடந்த 20 ஆண்டுகளுக்கு மேலாகவும், மிஷனில் பல ஆண்டுகளாக சிறந்த ஊழியம் புரிந்து ஜனுவரி மாதம் வேலையிலிருந்து நீங்கின B. V. தேவப்பிரசாதம் அவர்கள் கபவாத சுரத்தால் பீடிக்கப்பட்டு, ஜனுவரி மாதம் 11ம் தேதி கர்த்தனின் ராஜ்யம் அடைந்தனர். வயது 62. இவரது அடக்கம் பரிக்கல் கிராம திருவிழாபோல், ஊராரில் குடியானவர்களும், முகம்மதியரும், பெண்களும், மாணவரும் நிறைந்திருக்க, கனம் பின்சலவ் ஐயர், ஜார்க்கன்ஸன் ஐயர், பூலசுந்திரம் சபைப் போதகர் இவர்களால் அடக்க ஆராதனை நடத்த, பரிக்கல் கிராமத்தில் அடக்கம் செய்யப்பட்டார்.

---

## III. வாகையூர் ஜெபாலயப் பிரதிஷ்டை

விருத்தாசலம் தாலுக்கா, திட்டக்குடி வட்டகையைச் சேர்ந்த வாகையூர் என்ற கிராமத்திலுள்ள டேனிஷ் மிஷன் கிறிஸ்தவர்களுக்கு வெகு காலமாக ஓர் ஜெபாலயம் இல்லாமலிருந்தது. அங்கு ஜெபாலயம் கட்டவேண்டுமென்று வெகுகாலமாக எவ்வளவோ பிரயத்தனம் எடுத்தும், அடிக்கடி இதன் விஷயமாய் அநேக தடைகள் நேர்ந்து கொண்டிருந்ததே இதன் தாமதத்திற்கு காரணம்.

கடைசியாக, கனம் ஞானவேதக்கண் போதகர் அவர்கள் அதில் எடுத்துக்கொண்ட முயற்சியினாலும், ஸ்தல மிஷனெரி கனம் P. வண்டால் ஐயர் அவர்கள் அதற்கு பொருளுதவி விஷயமாய் செய்த பிரயாசையின் மூலமாய், தற்போது திட்டக்

குடி வட்டகைக்குப் போதகராயிருக்கும் கனம் D. M. டேவிட் அவர்கள், அல்லும் பகலுமாய் எடுத்துக்கொண்ட சிரத்தையினுலும் இந்த ஆலயம் கட்டப்பட்டு 13-உ பெப்ரவரி-மீ 1939-ளு காலை 9 மணிக்கு தேவனுடைய நாமத்தின் மகிமைக்கென்று, மிகுந்த விமரிசையுடன் பிரதிஷ்டை செய்யப்பட்டது. வைபவ ஆராதனை ஆரம்பிக்கு முன் வெடிகளும், மேளவாத்தியக் கோஷ்டியும் வெகு விமரிசையுடன் இருந்ததால், அன்று ஓர் பெரிய திருவிழா போலிருந்தது.

இப் பிரதிஷ்டைக்கு, விசேஷமாக T.E.L.C. அத்தியக்ஷர் மகா கனம் J. சாந்தகிரீன் சாஸ்திரியாரும், ஹோம்போர்ட் உப அக்ராசனுதிபதி மகா கனம் A. மாம்ஸ்ட்ரும் அத்தியக்ஷர் அவர்களும் அவ்விருவர்களின் மனைவிமார்களும் வந்திருந்ததோடு, மிஷனெரிகளான கனம் P. வண்டால் ஐயரும், அம்மாளும் கனம் ஹூக்காஸ் டாக்டரும், அம்மாளும் A. சுண்டபர்க் அம்மாள், வாக்கர் அம்மாள், ஹாபக் அம்மாள் முதலியவர்களும் T.E.L.C. யைச் சார்ந்த இரண்டு மிசிமார்களும், சபையின் பழைய போதகர்களான கனம் பெருமாள் ஐயரும், பீற்றர் ஜோசப் ஐயரும் விருத்தாசலம் உதவி போதகர்மார் கனம் சுவாமிதாஸ் ஐயர், ராஜமாணிக்கம் ஐயர் இவர்களும் ஆராதனைக்கு இருந்து சிறப்பித்தது எங்கள் சபைக்கு அதிக உற்சாகத்தையும், புத்துயிரையும் கொடுக்கிறது.

பிரதிஷ்டை ஆராதனை மகா கனம் A. மாம்ஸ்ட்ரும் அத்தியக்ஷரவர்களினுல் ஆரம்பிக்கப்பட்டது. மத். 16 : 16-18 வசனங்களின் பேரில், பிரசங்கத்தின் பொருளுக்கும், எங்கள் சபையின் நிலைமைக்கும் பொருந்தியவாறு மிகவும் அருமையாக பிரசங்கித்தார். பேதுரு அப்போஸ்தலனின் அறிக்கை: அந்த அறிக்கையின் பேரில் கட்டப்பட்ட தேவனுடைய சபை: இவ்வுலகத்தில் அப்படிப்பட்ட சபைக்கு விரோதமாய் எழும்பும் எந்த சாத்தானுடைய ஆயுதங்களும், பாதாளத்தின் வாசலும் மேற்கொள்ளுவதில்லையென்று இயேசுகிறிஸ்து சொன்ன சத்தியத்தின்படி ஆதித் திருச்சபையிலிருந்து இது வரைக்கும் எத்தனையோ சபையின் விரோதிகள் எழும்பி மேற்கொள்ளாமல் போனுர்களென்றும், இனிமேல் மேற்கொள்வதில்லை யென்றும் இந்த வாகையூர் சபையிலுங்கூட பாதாளத்தின் வாசல் மேற்கொள்வதில்லை யென்றும் பிரசங்கித்தார். அதன் பின்பு, அன்னுர் கோவிலைத் தேவனுடைய நாமத்தின் மகிமைக்கென்றும் எங்கள் சபையின் பக்தி விருத்திக்கென்றும் இரட்சிப்பின் சுவிசேஷப் பிரபல்யத்திற்கென்றும், கடவுளுடைய நாமம் என்றும் அதில் விளங்கவும் ஆலயத்தைப் பிரதிஷ்டை செய்தார்.



இதன் பின், மகா கனம் J. சாந்தகிரின் அத்தியக்ஷர் அவர்கள் வெளி. 21 : 32 வசனத்தின் பேரில்: பரம எருசலேம் தன் மணவாளனுக்கென்று அலங்கரிக்கப்பட்ட மணவாட்டியைப் போல இறங்கி வரப்போகிறதும், அந்தப் பட்டிணத்திற்கு சூரியன், சந்திரனின் ஒளி அவசியமில்லாமல், ஆட்டுக்குட்டியானவரே அதற்கு தீபம், அவரே அதற்கு ஆலயமுமாயிருக்கப் போகிற தீர்கக தரிசனங்களின் பேரில் பிரசங்கம் செய்ததோடு ஷெ ஆலயம் பலவர்ணக் கடிதங்களினுல் அலங்கரிக்கப்பட்டிருந்ததை கண்ணுற்று ஒவ்வொரு வர்ணத்திற்கும் ஞான உபமானப் பொருள்களைச் சொல்லி, சபையாரின் பக்தி விருத்திக்கேற்றதும் ஒருக்காலும் மறக்க முடியாததுமான வார்த்தைகளினுல் ஜனங்களின் உள்ளங்களில் கிறிஸ்துவின் சத்தியங்களை ஆழமாய் பதிப்பித்தனர். கடைசியாக, அன்னுர் இவ்வாலயத்திற்கு "எருசலேம் ஆலயம்" என்று பெயரிட்டு, சபையை ஆசீர்வதித்து, பிரதிஷ்டை ஆசீர்வாதத்தோடு முடித்தார்.

இவ்வாலயத்திற்கு அஸ்திவாரக்கல்லை நாட்டின நமது. பிரசிடெண்ட் கனம் C. பின்சுலவ் ஐயரவர்களுக்கு எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

C. M ரத்தினம் உபாத்தியாயர், வாகையூர்.

———:———

**BOOK PRESCRIBED FOR THE ESSAY: (HIGHER GRADE)**

*Psycho-analysis for normal people by Geraldine Coster,*

*Oxford University Press, Mound Road, Madras,—2s. 6d.*

**Subject for the essay:**

Give a brief account, with illustrative examples, of the view that modern *analytical* psychologists take of the *human mind and its working* (The conscious and the unconscious mind–Instinctive energy–Fears–sense of Power.................. Sublimation and Religion); and show how an analysis of or a search into, the motives, thoughts, impulses and emotions of a child or adult *either* gives us a clue to the best of coping with the every day problems of clashing personalities *or* opens the path to sublimate our instincts and imitate the Perfect Man.

Trichinopoly,
21st Feb. 1939.

**P. GAEBLER,**
*Director, Agents' Examn.*

Registered No. M—1979.

## The 16th Annual Students' Camp

The Sixteenth Annual Students' Camp of the Christa Sishya Sanga will be held at Tranquebar from the 2nd—the 6th of May 1939. The theme of the Camp is "Challenges". All are invited to attend.

*Camp fees:*

1. Students & the unemployed: Rs. 1—8—0 for the whole session or As. 8 per day.

2 Employed Indians: Rs. 2—0—0 for the whole session or As. 12 per day.

3. Europeans: Rs. 3—0—0 for the whole session or Re. 1—0—0 per day.

"Ranjani" Lalithapuram
Royapettah, Madras. 17th Feb. 39 } D. D. AUNUGRAHAM.

### துக்க செய்தி

காலம் சென்ற T. சாமுவேல் உபாத்தியாயருடைய சகோதரனும் எங்கள் தகப்பனுருமாகிய T. அருளப்பன் பொன்னுசாமி அவர்கள் ஒரு வாரமாக ஜுரத்தினால் கஷ்டப்பட்டு 17-12-38ல் காலை 3 மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரை அடைந்தார். மறுநாள் அவருடைய சடலம் சங். G. T. வேதமாணிக்கம் ஐயரவர்களால் பிலி: 21ன் பேரில் ஆறுதலான துக்கப் பிரசங்கம் செய்யப்பட்டு மாலை 5 மணிக்கு பூவம் சர்க்கார் உத்தான தோட்டத்தில் தமது பெற்றோரின் கல்லறைக்கருகில் நல்லடக்கம் செய்யப்பட்டது வயது: 58.

துக்கத்தில் ஆழ்ந்திருக்கும் மனைவி மக்கள்

ஞான சவுந்திரம் அம்மாள்

அபிஷேகநாதன் — அருள் தேவசகாயம்

தானியேல் தங்கதுரை — அருள் பரிபூரணம் அம்மாள்

மாஜி மகாகனம் D. பெக்செல் அத்தியக்ஷரவர்களுக்குத் திருச்சி சீயோன் கோயிலில் ஞாபகார்த்தக் கல்லொன்றைப் பதிக்க உத்தேசித்திருப்பதாலும், அதற்குப் போதுமான பணமில்லாததாலும், மாஜி அத்தியக்ஷரின் நண்பரான சகோதரர் சகோதரிகள் இத்றகென்று பொருளுதவி செய்யக் கோருகிறோம்.

Clock Tower,
Trichy. } S. GNANAMANICKAM,
சபை குரு.

